# திருப்புகழமிர்தம்



ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை

சாதாரண யுதவு பரிமள மதுகர வெகுவித ஆனி

வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

முருகா

## ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள்
## அவதார நாள் விழா

சாதாரண ஆண்டு ஆனி மீ 5உ (19-6-1970) வெள்ளிக்கிழமை

1. காங்கேயநல்லூர்த் திருப்புகழ்ச் சபையாரால் ஸ்ரீ முருகப் பெருமான் திருக்கோயிலிலும்,
2. மதுரைத் திருப்புகழ்ச் சபையாரால் ஸ்ரீ மீனாக்ஷியம்மன் கோயிலில் தெற்கு ஆடி வீதியில் உள்ள திருப்புகழ்ச் சபையிலும்,
3. ஸ்ரீ அருணகிரிநாத பக்தஜன சபையாரால் சென்னை, கந்தகோட்டம் ஸ்ரீ முத்துக்குமார சுவாமி கோயில் மெத்தை மண்டபத்திலும்,
4. நெல்லைத் திருப்புகழ்ச் சபையாரால் திருநெல்வேலி தொண்டர்கள் நயினார் கோயிலிலும்,
5. விராலிமலைத் திருப்புகழ்ச் சபையாரால் ஷ்டி யூர் மலைக் கோயிலிலும்,
6. திருச்சிராப்பள்ளித் திருப்புகழ்ச் சபையாராலும் பிற அன்பர்களாலும், வயலூர் ஸ்ரீ முருகப் பெருமான் திருக் கோயிலிலும்,

இன்னும் பிற இடங்களிலும் சிறப்பாகக் கொண்டாடப் பெறும்.

## அன்பர்கள் கவனத்துக்கு

15–5–70 முதல் தபால் ரிஜிஸ்ட்ரேஷன் (பதிவுக் கட்டணம்) செலவு 0·75லிருந்து 0·95 ஆக உயர்ந்துள்ளது. புத்தகத்துக்குரிய விலை, தபாற்செலவு இவைகளுடன் மேற்கொண்டு 0·95 சேர்த்து அனுப்பி வைக்கவேண்டும். சில அன்பர்கள் புத்தகங்களின் விலையுடன் 0·95 மட்டும் சேர்த்து அனுப்பி வைக்கின்றனர். இது சரியல்ல. புத்தகத்தின் விலை + தபாற்செலவு + ரிஜிஸ்ட்ரேஷன் செலவு ஆக மூன்றையும் தெரிந்து சேர்த்து அனுப்பி வைக்கவேண்டும்.

## எச்சரிக்கை

சென்னையிலிருந்து 'முருகு' என்று ஒரு வார இதழ் வெளி வருகின்றது. அதில் நமது ஆசிரியர் எழுதும் கட்டுரை தொடர்ந்து வெளி வருவதாக விளம்பரம் செய்துள்ளார்கள். அந்தப் பத்திரிகைக்கும் நமது ஆசிரியருக்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாது. சந்தாநேயர்களும் ஏஜண்டுகளும் விளம்பரங்களைப் பார்த்து ஏமாறாதிருக்க வேண்டுகின்றோம்.

மானேஜர், திருப்புகழமிர்தம்

## கைவசமில்லை

பின்வரும் புத்தகங்கள் கைவசம் கிடையாது. ஆகவே அந்தப் புத்தகங்களை அனுப்பி வைக்குமாறு அன்பர்கள் யாரும் பணம் அனுப்பி வைக்க வேண்டாமென்று கேட்டுக் கொள்ளுகின்றோம். மறு பதிப்பு அச்சானவுடன் திருப்புகழமிர்தம் மூலமே தெரியப்படுத்துவோம்.

1. கந்தரலங்காரம் (உரையுடன்)
2. திருவகுப்பு, கந்தரந்தாதி (உரையுடன்)—முதலியன
3. கற்புக் கனிகள் முதற் புத்தகம்
4. ஸ்ரீ சுப்ரமண்ய ஸஹஸ்ர நாமம்.

மானேஜர், திருப்புகழமிர்தம்

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"





| மலர் 35 | சாதாரணஞு—ஆனி மீ<br>ஜூன் 1970 | இதழ் 3 |
|---|---|---|



## திருப்புகழ்

### திருவருணை

காணாத தூர நீணாத வாரி
காதார வாரம தன்பினாலே
காலாளும் வேளும் ஆலால நாதர்
காலால் நிலாவுமு னிந்துபூமேல்

நாணான தோகை நூலாடை சோர
நாடோர்க ளேசஅ ழிந்துதானே
நாணுப வாத மேலாக ஆக
நாடோறு வாடிம யங்கலாமோ

சோணாச லேச பூணாரம நீடு
தோளாறு மாறும்வி ளங்குநாதா
தோலாத வீர வேலால டாத
சூராளன் மாளவெ குண்டகோவே

சேணாடர் லோகம் வாழ்மாதி யானை
தீராத காதல்சி றந்தமார்பா
தேவாதி கூடு மூவாதி மூவர்
தேவாதி தேவர்கள் தம்பிரானே.

## பதவுரை

சோண அசல ஈச=சிவந்த மலையாகிய திருவண்ணுமலையின் தலைவரே! பூண் ஆரம்=அணிந்துள்ள மாலைகள், நீடு தோள் ஆறும் ஆறும்=நீண்ட பன்னிரு தோள்களிலும், விளங்கு நாதா=விளங்குகின்ற நாதரே! தோலாத வீர=தோல்வி யில்லாத வீரமூர்த்தியே! வேலால்=வேலாயுதத்தைக் கொண்டு, அடாத=தகாத காரியங்களைச் செய்த, சூர் ஆளன் மாள=சூரன் என்ற ஆண்மையாளன் இறந்து போம்படி, வெகுண்ட கோவே=கோபித்த தலைவரே! சேண் நாடர்=விண்ணுலகத்தாருடைய, லோகம் வாழ்=உலகத்தில் வாழ்ந்திருந்த, மாது யானை=தேவயானை என்ற மாதிடம், தீராத காதல்=முடிவில்லாத அன்பு பூண்ட, சிறந்த மார்பா=சிறப்புடைய திருமார்பினரே! தேவ ஆதி=தேவர்கள் முதலியோர், கூடு மூவாதி மூவர்=மூன்றெனக் கூடிய ஆதிமூர்த்திகளாம் மூவர்கள், தேவாதி தேவர்கள்=தேவர்கட்குத் தலைவராகிய இந்திரன் முதலியவர்கட்கும், தம்பிரானே=தனிப் பெருந்தலைவரே! காணுத தூரம்=கண்ணுக்கு எட்டாத தூரம் பரந்துள்ள, நீள் நாத வாரி=பெரிய ஒலியுடைய கடலின், காது ஆரவாரம்=கொல்வது போன்ற ஆடம்பரமும், அதன் பினுலே=அதன் பிறகு, கால் ஆளும் வேளும்=தென்றல் காற்றைத் தேராகக் கொண்ட மன்மதனும், ஆலால நாதர்=ஆலகால விடத்தையுண்ட சிவபெருமான், காலால் நிலாவும்=காலினுல் தேய்க்கப்பட்ட சந்திரனும், முனிந்து=கோபிக்கப்பட்ட, பூ மேல்=இந்தப் பூமியின் மேல், நாண் ஆன தோகை=நாணங்கொண்ட மயில் போன்ற இப் பெண், நூல் ஆடை சோர=நூலினுல் ஆன ஆடை நெகிழ, நாடோர்கள் ஏச=நாட்டில் உள்ளோர் பழித்துப் பேச, அழிந்து தானே=உள்ளம் அழிந்து அதனுல், நாஞபவாதம் மேலாக=பலவித அபவாதங்கள் மேலெழுந்து வெளிப்பட, ஆகம்=உடல், நாள் தோறும் வாடி மயங்கலாமோ=தினந்தோறும் வாடி மயக்கம் அடையலாமோ?

## பொழிப்புரை

திருவண்ணுமலைக்கு அதிபரே! பன்னிரு புயங்களில் மாலைகள் சிறந்து விளங்குகின்ற நாதரே! தோல்வியில்லாத வீரமூர்த்தியே! தகாத செயல்களைச் செய்த சூரனுகிய ஆண்மையுடையவன் அழியுமாறு வேல் கொண்டு முனிந்த தலைவரே! விண்ணுலகத்தார்களாகிய தேவர்கள் வாழும் தேவலோகத்தில் வாழ்ந்த தேவயானை யம்மைமீது முடிவில்லாத காதல் பூண்ட திருமார்பினரே! தேவர்கள் முதலியோர்க்கும், அயன் அரி, அரன் என்ற மும்மூர்த்திகட்கும், இந்திரனுதி யிமையவர்க்குந் தனிப் பெருந்தலைவரே! கட்புலனுக்கு எட்டாத அளவில் பரந்துள்ளதும், பெரிய ஓசை யுடையதுமான கடலின் ஒலி கொல்வது

போல் ஆரவாரம் புரியவும், அதன்பின், தென்றலைத் தேராக வுடைய மன்மதனும் ஆலமுண்ட நீலகண்டரின் காலால் தேய்க் கப்பெற்ற சந்திரனும் கோபிக்க, இப்பூமியின் மீது நாணங் கொண்ட மயில்போன்ற இப்பெண், தனது நூற்புடவை நெகிழ நாட்டில் உள்ளார் பழிக்க, அதனுல் உள்ளம் அழிந்து, பலவித அவதூறுகள் தோன்ற, நாள்தோறும் உடல் மெலிந்து மயக் கம் அடையலாமோ?

## விரிவுரை

இத்திருப்புகழ் அகப்பொருள் துறையில் அமைந்தது.

**காணுததூர நீணுதவாரி:—**

காணமுடியாத தூரம் உள்ளதும், நீண்ட ஒலியுமுடைய தும் ஆன கடல்.

நீள் நாதம் என்ற சொல் நீணுதமென வந்தது. காணுத நீணுத என்ற சொல்லமைப்பு சுவையுடையது.

**காதாரவாரம்:—**

காதுதல்—கொல்லுதல். கொல்வது போன்ற கொடுமை யைச் செய்வது கடலோசை.

**காலாளும் வேளும்:—**

கால்—காற்று. ஆளும் வேளும்—காற்றைத் தேராக ஆளு கின்ற மன்மதன். காலாளும்வேளும்—என்று அடிகளார் தமிழ்ச் சொல்லை எத்தனை அழகாக அமைக்கின்ருர் பாருங்கள்.

**ஆலாலநாதர் காலால் நிலாவும்:—**

தட்சயாகத்தில் வீரபத்திரர் சந்திரனைக் காலால் தேய்த் தருளினுர்.

"சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன்தன் வேள்வியினில்"

—(அம்மானை) திருவாசகம்.

"...................மதியினை வீரன் காணுருத்
தன்னெரு பதங்கொடே தள்ளி மெல்லெனச்
சின்னம துறவுடல் தேய்த்திட் டானரோ."

—கந்தபுராணம்.

**முனிந்து:—**

மன்மதனும், சந்திரனும் காமுகரைச் சினந்து வேதனைப் படுத்துவர்.

காதல் நோயுடையாருக்குக் கடலோசை, மன்மதன் சந்திரன் ஊரவர் பேசும் உரை இவைகள் பெருந்துயரைத் தரும்.

**நாளுபவாத மேலாக:—**

ஊரார்கள் நாலாவகையான பழியுரை பகர்வர்.

**வாடி மயங்கலாமோ :—**

முருகப் பெருமானே! உன்னை விரும்புகின்ற இப் பெண் இவ்வாறு உடல் மெலிந்து உள்ளம் நலிந்து அழிவது முறையோ? முறையன்று. நீ இவளை மருவி ஆண்டருள்.

**பூணரம்:—**

பூணுகின்ற மாலைகள். அல்லது முத்துமாலைகள்.

**தோலாத வீர :—**

தோல்வியில்லாத வீரமூர்த்தி முருகவேள். வெற்றிக் குமரன்.

**தேவாதி கூடு மூவாதிமூவர் தேவாதி தேவர்கள் தம்பிரானே :—**

தேவர்கள் மூவர்கள் முதலிய யாவர்க்குந் தனிப்பெருந் தலைவன் முருகப்பெருமான் என்று அவருடைய முழுமுதற் றன்மையை அடிகளார் கூறுகிருர்.

கருத்துரை

அருணையண்ணலே! இப் பெண்ணை மருவி யாண்டருள்.

## திருப்புகழ்

காரா டக்குழ லாலா லக்கணை
கண்கள் சுழன்றிட வேமு கங்களி
ளூலா பச்சிலை யாலே மெற்புசி
மஞ்சள் கலந்தணி வாளி கொந்தள
காதா டக்கலன் மேலா டக்குடி
யின்ப ரசங்குட மார்ப ளிங்கொளி கொங்கைமாதர்

காசா சைச்செய லாலே சொக்கிடு
விஞ்சையர் கொஞ்சிடு வாரி ளங்குயில்
போலே நற்றெரு வூடா டித்துயல்
தொங்கல் நெகிழ்ந்திடை யேது வண்டிட
கால்தா விச்சதி யோடே சித்திர
மென்ப நடம்புரி வாரு டன்செயல் மிஞ்சலாகிச்

சீரா டிச்சில நாள்போய் மெய்த்திரை
வந்து கலந்துயி ரோட வங்கமொ
டோ டிப்பல நோயோ டுத்தடி
கொண்டு குரங்கென வேந டந்துசொல்
சீயோ டிக்கிடை பாயோ டுக்கிய
டங்கி யழிந்துயி ரோடுஊஞ்சொளி யுங்கண்மாறி

சேரா மற்பொறி கேளா மற்செவி
துன்பமொ டின்பமு மேம றந்துபின்
ஊரார் சுற்றமு மாதோர் மக்களு
மண்டியு மண்டையு டேகு விந்திது
சீசி சிச்சிசி போகா நற்சனி
யன்கட வென்றிட வேகி டந்துடல் மங்குவேனோ

மாரோன் முப்புர நீறு யுற்றிட
அங்கி யுமிழ்ந்திடு வோரி பம்புலி
தோல்சீ யத்தொடெ யேகா சர்ச்சடை
கங்கை யிளம்பிறை யார ணிந்தவர்
மாடே றிக்கட லாலா லத்தையு
முண்டவரெந்தைசிவா நுபங்குறை யென்றன்மாதா

மாலோ னுக்கிளை யாள்மா பத்தினி
யம்பிகை சங்கரி மோக சுந்தரி
வேதா மக்கலை ரூபாள் முக்கணி
ரம்பிய கொங்கையி னுள்ப யந்தருள்
மாஞா னக்கும ராதோ கைப்பரி
யின்பத வண்குரு வேயெ னஞ்சூரர்
தொண்டுபாடச்

சூரார் மக்கிட மாமே ருக்கிட
அங்கட லெண்கிரி யோடி பங்கொடு
தீபே ழுற்றிட பாதா ளத்துறை
நஞ்சர வின்பண மாயி ரங்கெட
சூழ்வா ளக்கிரி தூளா கிப்பொடி
விண்கணி றைந்திட வேந டம்புரி கின்றவேலா

சோர்வே தத்தலெ மேலா டிச்சுக
பங்கய செங்கர மோட கம்பெற
வாகா னக்குற மாதோ டற்புத
மங்குல ணங்குட னேம கிழ்ந்துநல்
தூணோ டிச்சுட ராகா சத்தைய
ணைந்துவி ளங்கரு ணாச லந்திகழ் தம்பிரானே.

## பதவுரை

மாரோன்=மன்மதனும், முப்புரம்=மூன்று புரங்களும், நீறாய் உற்றிட=சாம்பலாகும்படி, அங்கி உமிழ்ந்திடுவோர்=நெருப்பை உமிழ்ந்தவரும், இபம்=யானை, புலி தோல்=புலி இவைகளின் தோலையும், சீயத்தொடே=சிங்கத்தின் தோலையும், ஏகாசர்=மேல் போர்வையாகக் கொண்டவரும், சடை கங்கை இளம்பிறை=சடையில் கங்கையையும் இளம்பிறைச் சந்திரனையும், ஆர்=ஆத்திமலரையும், அணிந்தவர்=சூடிக்கொண்டவரும், மாடு ஏறி=விடைமீது ஏறுபவரும், கடல் ஆலாலத்தையும் உண்டவர்=கடலிற் பிறந்த ஆலகால நஞ்சையுண்டவரும், எந்தை=எங்கள் பிதாவுமாகிய, சிவ அநுபங்கு உறை=சிவபெருமானுடன் அவர் திருமேனியில் பாதியாக உறையும், என்றன் மாதா=எனது தாயும், மாலோனுக்கு இளையாள்=திருமாலுக்குத் தங்கையும், மாபத்தினி=மகாபத்தினியும், அம்பிகை=அம்பிகையும், சங்கரி=சுகத்தைச் செய்பவரும், மோக சுந்தரி=அன்புக்கு உரிய அழகியும், வேத ஆகம கலை ரூபாள்=வேத ஆகம நூல்களின் வடிவமானவளும், முக்கண்=மூன்று கண்களையுடையவளும், நிரம்பிய கொங்கையினாள்=பருத்த தனங்களையுடையவளும் ஆகிய உமாதேவியார், பயந்து அருள்=பெற்றருளிய, மா ஞான குமரா=பெருமைமிக்க ஞானக் குமாரக் கடவுளே! தோகை பரியின் பத=கலாபத்தையுடைய மயிலின்மீது திருவடி வைத்துள்ளவரே! வண் குருவே=வளமை வாய்ந்த குருமூர்த்தியே! என அம்சுரர் தொண்டு பாட=என்று அழகிய தேவர்கள் அடிமை பூண்டு பாட, சூரார் மக்கிட=சூராதியவுணர்கள் அழிந்து போகவும், மா மேரு உக்கிட=பெரிய மேரு மலையும் மெலிவு அடையவும், அம் கடல்=அழகிய சமுத்திரமும், எண் கிரி=எட்டு மலைகளும், இபம் கொடு=யானைகளுடன், தீப ஏழ் அற்றிட=ஏழு தீவுகளும் குலையவும், பாதாளத்து உறை=பாதாளத்தில் வாழ்கின்ற, நஞ்சு அரவின் பணம் ஆயிரம் கெட=நஞ்சையுடைய ஆதிசேடனுடைய பணாமகுடங்கள் ஆயிரமும் கேடு அடையவும், சூழ் வாளகிரி=சூழ்ந்துள்ள சக்கரவாள மலை, தூள் ஆகி=தூள்பட்டு, பொடி விண்கள் நிறைந்திடவே=அப்பொடிகள் ஆகாயமெல்லாம் நிறையும் வண்

ணமே, நடம் புரிகின்ற வேலா = நடனஞ் செய்த வேலாயுதரே! சோர் வேத தலைமேல் ஆடி = சோர்கின்ற வேதத்தின் உச்சியின்மேல் விளங் குபவரே! சுக = சுகத்தையும், பங்கய செம் கரமோடு = உமது தாமரை யன்ன செம்மையான கரத்துடன், அகம் பெறு = உள்ளத்தையும் பெற்ற, அ வாகு ஆன குற மாதோடு = அந்த அழகிய குறமாதோடு- குறமகளாம் வள்ளியுடனும், மங்குல் அணங்குடனே மகிழ்ந்து = அற் புதமான விண்ணுலக மடந்தையுடனும் மகிழ்ச்சியுற்று, நல் தூண் ஒடி சுடர் = நல்ல நெருப்புத் தூணும் சிவசுடர், ஆகாசத்தை அணைந்து விளங்கும் = ஆகாயத்தை அளாவி விளங்கும் அருணாசலம், திகழ் = திருவண்ணாமலையில் விளங்குகின்ற, தம்பிரானே = தனிப் பெருந் தலைவரே! அ குழல் கார் ஆட = அந்தக் கூந்தல் மேகம்போல் விளங்க, ஆலால கணை = ஆலகால நஞ்சு தோய்ந்த கணை போன்ற, கண்கள் சுழன்றிடவே = கண்கள் சுழல, முகங்களில் நாலா பச்சிலையாலே மெல் புசி = முகத்தில் நாலா வகையான பச்சிலைகளை மேலே பூசி, மஞ்சள் கலந்து அணி = மஞ்சள் கலந்து அணிந்துள்ள, வாளி = காதணியா னது, கொந்தள காது ஆட - கூந்தலுக்கு அருகில் உள்ள காதில் ஆட, கலன் மேல் ஆட = ஆபரணங்கள் மேலே ஆட, இன்பரசம் குடி குட மார் = இன்பச் சுவை குடிகொண்ட குடங்கள் போன்று, பளிங்கு ஒளி = பளிங்கின் ஒளி கொண்ட, கொங்கை மாதர் = தனங்களை யுடைய பெண்கள், காசு ஆசை செயலாலே = காசின் மீதுள்ள ஆசைச் செயல்களால், சொக்கு இடுவிஞ்சையர் = மயக்கப் பொடி போடு கின்ற மாய வித்தை வல்லவர், கொஞ்சிடுவார் = கொஞ்சிப் பேசுபவர் கள், இளம் குயில் போலே = இளங்குயிலைப் போல், நல் தெரு ஊடாடி = நல்ல தெருக்களில் இங்குமங்கும் உலாவி, துயல் தொங்கல் நெகிழ்ந்து = அசைகின்ற மேலாடை நெகிழவும், இடையே துவண் டிட = இடை துவளவும், கால் தாவி = கால் தாவ, சதியோடே = தாள ஒத்துடன், சித்திரம் என்ப = சித்திரப் பதுமை என்னும்படி நடம் புரிவார் = நடனம் ஆடுபவர், உடல் செயல் மிஞ்சல் ஆகி - இத் தகைய பொது மாதர்களுடன் இணங்குந் தன்மை அதிகமாகி, சீர் ஆடி = சிறப்பாகக் காலங்கழித்து, சில நாள் போய் = சில நாள் சென்ற பின், மெய் திரை வந்து கலந்து = உடலில் தோல் சுருக்கங்கள் ஏற்பட, உயிர் ஓட - உயிர் போகும்படி, அங்கமொடு ஊடாடி = இந்த உடம் புடன் வேதனைப்பட்டு, பல நோயோடு = பலப்பல நோய்களுடன், தடிகொண்டு குரங்கு எனவே நடந்து = தடியூன்றி குரங்குபோல் கூனி நடந்து, சீ ஓடி = சொல்லுகின்ற "சீ" என்னும் சொல் எங்கும் பரவ, கிடை பாயோடு உக்கி உடங்கி அழிந்து = கிடக்கை பாயுடன் மெலிந்து அடங்கி அழிந்து, உயிரோடு உளைஞ்சு = உயிருடன் வேதனை யடைந்து, கண் ஒளியும் மாறி = கண்களில் ஒளியும் நீங்கி, பொறி சேராமல் = பொறிகள் ஒரு வழிப்படாமல் கலங்கி, செவி கேளாமல் = காது கேட்காமல், துன்பமோடு இன்பமுமே மறந்து = துன்பம்

**இன்பம் இரண்டையும் மறந்து, நினைவற்றுப் போய், ஊரார் = ஊராரும், சுற்றமும் = சுற்றத்தாரும், மாதோர் = பெண்டிரும், மக்களும் = மக்களும், மண்டியும் = நெருங்கியும், அண்டையுடே குவிந்து = அருகில் கும்பு கூடியும், இது சீசி சிச்சிசி போகா = இது சீசீ சிச்சி சீ இப்போது போகாது, நல் சனியன் = நல்ல சனியன், கட என்றிட = கடக்கட்டும் என்று கூறிச் செல்ல, கிடந்து உடல் மங்குவேனோ = அங்ஙனமே கிடந்து உடல் அழிவேனோ?**

## பொழிப்புரை

மன்மதனும் முப்புரமும் சாம்பலாகுமாறு நெருப்பை உமிழ்ந்தவரும், யானை புலி சிங்கம் இவைகளின் தோலையுரித்து மேல் போர்வையாகத் தரித்தவரும், கங்காநதியையும் இளம் பிறைமதியையும் ஆத்திமலர் மாலையையும் சடையில் சூடிக் கொண்டவரும், இடபத்தில் ஏறுபவரும், கடலிற்பிறந்த ஆல கால நஞ்சை யுண்டவரும், எங்கள் பிதாவுமாகிய சிவபெருமானுடைய திருமேனியில் பாதியாக உறைகின்ற என் அன்னையும், திருமாலின் திருத்தங்கையும், மகாபத்தினியும், அம்பிகையும், சுகத்தைச் செய்பவளும், அன்புக்குரிய அழகியும், வேதாகமக் கலைகளின் வடிவாக விளங்குபவளும், முக்கண்ணியும், பருத்த தனங்களை யுடையவளும் ஆகிய பார்வதியம்மை பெற்றருளிய, பெரிய ஞானக் குமாரக்கடவுளே! தோகை மயிலின்மீது பாதம் வைத்திருப்பவரே! வளமையான குருமூர்த்தியே! என்று அழகிய தேவர்கள் அடிமைபூண்டு பாட, சூரன் முதலிய அசுரர்கள் அழியவும், மகாமேருகிரி மெலியவும், அழகிய கடலும் எண்கிரிகளும், அஷ்டகஜங்களுடன் ஏழு தீவுகளும் குலையவும் பாதலத்தில் வாழும் நச்சரவமாகிய ஆதிசேடனுடைய ஆயிரம் பணமகுடங்களும் கேடு அடையவும், சூழ்ந்துள்ள சக்ரவாளகிரி தூள்படவும், அத்தூள்கள் ஆகாயமெல்லாம் நிறையுமாறும் நடனம் புரிந்த வேலாயுதக் கடவுளே! சோர்வுபடுகின்ற வேதத்தின் உச்சியின்மீது விளங்குபவரே! சுகத்தையும், உமது தாமரை போன்ற திருக்கரத்தையும், உமது உள்ளத்தையும் பெற்ற அந்த அழகிய வள்ளியம்மையுடனும், அற்புதமான விண்ணுலக மாதாகிய தேவ சேனையுடனும் மகிழ்ச்சியுற்று, நல்ல அக்கினித் தூணாகிய சிவசுடர் ஆகாயத்தை அளாவி விளங்கும் திருவண்ணமலையில் எழுந்தருளியுள்ள தனிப்பெருந் தலைவரே! கூந்தல் அந்த மேகம்போல் விளங்கவும், ஆலகால விஷம் தோய்ந்த கணைபோன்ற கண்கள் சுழலவும், முகத்தில் பலவகையான பச்சிலைகளை மேலே பூசி, மஞ்சளைக் கலந்து அணிந்துள்ள வாளி போன்ற காதணியானது, கூந்தலுக்கு அருகில் உள்ள காதில் அசையவும், ஆபரணங்கள் மேலேயாடவும், இன்பரசம் குடிகொண்ட குடங்கள் போலவும் பளிங்கின் ஒளி கொண்டனவுமாகிய தனங்களையுடைய பெண்கள், காசின் மீதுள்ள ஆசையால் மயக்கப்பொடி தூவுகின்ற மாயவித்தை

யில் வல்லவர்கள்; கொஞ்சிப் பேசுபவர்; இளங்குயில் போல் நல்ல தெருக்களில் நடமாடுபவர்; அசைகின்ற மேலாடை நெகிழவும், இடை துவளவும், கால்கள் தாவவும், தாள ஒத்துடன் சித்திரப்பாவை யென்னும்படி நடனம்புரிபவர்; இத்தகைய பொதுமகளிரின் இணக்கச் செயல் மிகுந்து, சிறப்பாகக் காலங்கழித்து, சிலநாள் சென்றபின், உடலில் தோல் சுருங்கி, உயிர் போகும்படி உடலுடன் வேதனைப்பட்டு, பல நோய்களுடன், தடியூன்றி, குரங்குபோல் கூனி நடந்து "சீ" என்று பிறர் சொல்லும் இகழ்ச்சிச் சொல் எங்கும் பரவி, பாயில் படுக்கையாகி, மெலிந்து நலிந்து அழிந்து உயிர் உளைந்து, கண்ணொளி போய் குருடாகி, மற்ற பொறி புலன்கள் கலங்கி, காது கேளாது செவிடாகி, இன்பதுன்பம் இரண்டையும் மறந்து, உணர்வு இன்றிக்கிடந்து, ஊராரும் உறவினரும் மனைவி மக்களும், நெருங்கி அருகில் கூடியிருந்து, "இது சீசீ இப்போது உயிர் போகாது; நல்ல சனியன்; கடக்கட்டும்" என்று இகழ்ந்து கூறிச் செல்ல, அங்ஙனமே கிடந்து உடல் அழியக் கடவேனோ?

## விரிவுரை

**காராடக் குழல்:—**

மாதர்களின் குழல் கரிய மேகம்போல் கருத்துப் பெருத்து விளங்குகின்றது.

பெண்களுக்கு மிகவும் அழகு செய்வது,இருண்டு சுருண்ட கூந்தலாகும்.

**ஆலாலக் கணை கண்கள் சுழன்றிட :—**

ஆலகால நஞ்சு தோய்ந்த கணையைப்போல் கண்டார் உயிரைத் திருகிப்பருகுங் கொடுமையுடைய கண்கள் சக்கரம்போல் சுழல்கின்றன.

**முகங்களி னுலா பச்சிலையாலே மெற்புசி:—**

முகம் மினுமினு என்று ஒளிசெய்யும் பொருட்டு, பலவிதமான பச்சிலைகளைப் பூசுவர்.

தற்காலத்தில் பழக்கத்தில் உள்ள சுண்ணும்புச் சத்து சேர்ந்த சோப்பு என்ற சாதனம் உடலின் மினுமினுப்பை மாற்றி உடல் நலத்தைக் குறைக்குந் தன்மை யுடையது.

மேல்பூசி என்ற சொல் சந்தத்தைக் கருதி மெறபுசி என வந்தது.

**வாளி கொந்தள காதாட:—**

வாளி என்பது ஒருவகை காதணி. கூந்தலின் அருகில் உள்ள காதில் அந்த காதணி அசைந்து அழகு செய்யும்.

**கலன்மேலாட:—**

நெற்றியில் உள்ள சுட்டி, கழுத்தணி, மார்பில் உள்ள முத்தாரம், கைவளைகள் முதலிய அணிகலன்கள் அசைந்து ஒளி செய்யும்.

**துயல் தொங்கல் நெகிழ்ந்திட:—**

துயல்—அசைகின்ற. அசைகின்ற மேலாடை நெகிழ்வதுபோல் செய்து இளைஞர்களது உள்ளத்தை ஈர்ப்பார்கள்.

**"வாடாமலை ஒடையோடு துயல்வர"** —திருமுருகாற்றுப்படை

**கால்தாவிச் சதியோடே சித்திரமென்ப நடம்புரிவார்:—**

கால் தாவித் தாவிச் செல்ல; சதி—தாள ஒத்துடன், சித்திரப் பதுமைபோல் நடனம்புரிபவர்கள்.

**சீராடி:—**

இத்தகைய விலை மாதருடன் கூடியாடி சிலகாலம் சிறப்பாகக் கழியும்.

**மெய்த்திரை வந்து:—**

உடம்பில் சுருக்கம் வந்து திரைத்து நரைத்து வனப்பு குன்றி நிற்கும்.

**தடிகொண்டு குரங்கெனவே நடந்து:—**

தெய்வத்தையும், பெரியோர்களையும் மதியாமலும் துதியாமலும், நிமிர்ந்து நடந்த காலம் நீங்கி, தடியூன்றி, குரங்குபோல் கூனி நடக்கும் அவலநிலை யெய்தும்.

**"செங்கையினி லோர் தடியுமாகியே**
**வருவது போவ தொருமுது கூனு**
**மந்தி யெனும்படி குந்தி நடந்து"**
**(உடற்கூற்று வண்ணம்)—பட்டினத்தார்.**

**சீயோடிக்கிடை பாயோடுக்கிய:—**

முதுமை வந்து மனிதன் வேதனையடைகின்றபோது, முன் அன்பாகப் பழகிய மனைவி மக்கள் "சீசீ, உனக்கு சாவுவரவில்லையே. நீயேன் இன்னும் பூமிக்குச் சுமையாக இருக்கின்ருய்" என்று கூறி யிகழ்வார்கள்.

**"மாதர் சீயென வாலர் சீயென"** **—(அறுகுநுனி) திருப்புகழ்.**

**சீசீசிச்சிசி போகாநற் சனியன் கடவென்றிட:—**

"சீசீ, இது இன்னும் சாகாமல் கிடக்கின்றதே சனியன். இதற்கு யார் உபகாரம் செய்வார்? அப்படியே கிடக்கட்டும்"

என்று கூறி உறவினர் வெறுத்து விலகுவர். இது பெரிய பரிதாபம். இவ்வாறு அழியுமுன் முருகன் பாதம் சேர வேண்டும்.

**சீயத் தொடெ யேகாசர்:—**

*சீயம்—புலி; ஏகாசம்—மேற்போர்வை.*

"பொருபூத ரமுரித் தேகாசமிட்ட புராந்தகர்"

—*கந்தரலங்காரம் (45)*

சிவபெருமான் சிங்கத்தின் தோலையுரித்து அத் தோலையும் தலையையும் அணிந்தார்.

தரியா வுளமால் கொடுதன் னிகழும்
அரியொ டுகைம்மா வையடற் புலியை
உரியா மிசைபோர் வையுடுக் கையெனப்
பரியா அரன்உற் றதுபார்த் திலையே.

—*கந்தபுராணம் (காமதகனம்)*

வெந்திறற்சீயஞ் சீயத் தலைபுனைதருந் தென்வெள்ளிச்
சயிலத்தினிறக் கின்மன்னே.

—*சீகாளத்தி புராணம்(தென்கயிலாயச் சருக்கம்) (68)*

"ஏனையோர்க் கிறைமையின்மை காட்டி
முடங்குளை மடங்கல் முகனடு உக்கோத்த
வெண்டலைமாலை கண்டவர் வெருவத்
தண்டாது கிடைக்குந் திண்டோட் பொருப்பன்"

—*இஷ்டலிங்க அகவல்*

"தங்கிய மாதவத்தின் தழல்வேள்வியி னின்றெழுந்த
சிங்கமும் நீள்புலியும் செழுமால்கரி யோடலறப்
பொங்கிய போர்புரிந்து பிளந் தீருரி போர்த்த தென்னே"

—*சுந்தரர் 2, 7, 99-6.*

தாருகவனத் திருடிகள், சிவபெருமானைப் பகைத்து அபிசாரவேள்வி செய்து, சிங்கம், புலி, யானை இவைகளைத் தோற்றுவித்து, சிவமூர்த்தியைக் கொல்லும் பொருட்டு ஏவினார்கள். அரனார் அவைகளை அடர்த்து அவைகளின் தோலை உரித்து உடுத்துக் கொண்டார். மேலே போர்த்துக் கொண்டார்.

**சிவானுபங்குறை யென்றன் மாதா:—**

*சிவ அநுபங்கு உறை.*

சிவபெருமானுடன் அவர் திருமேனியில் பாதிகொண்டு உறையும் என் தாய் பார்வதி.

**வேதாமக்கலே ரூபாள்:—**

வேதாகம என்பது சந்தம் நோக்கி இடைக் குறையாக வேதாம என்று வந்தது.

வேதாகம சாத்திர வடிவானவள் தேவி.

**"நாதவடிவி யகிலம் பரந்தவள்"—(ஓலமறை) திருப்புகழ்.**

**எனஞ்சுரர்:—**

என அம் சுரர்.

என்று அழகிய தேவர்கள் அடிமை பூண்டு முருகவேளைத் துதி செய்கின்றனர்கள்.

**எண்கிரி:—**

எண் திசைகளில் உள்ள குலகிரிகள். இமயம், மந்தரம், கைலாசம், விந்தியம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமானம் என்பன.

**இபம்:—**

எண் திசையிலுள்ள எட்டு யானைகள். ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம் என்பன.

**தீபேழ்:—**

ஏழுதீவுகள்.

நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு, என்ற இவ் வெழுவகைப் பொருள்கள் அவ்வத்தீவில் மிக்கன; ஆதலால் அவற்றால் அத்தீவுகள் பேர் பெற்றன.

**நடம்புரிகின்ற வேலா:—**

முருகவேள் சூராதியவுணரைக் கொன்ற போர்க்களத்தில், நடனம் புரிந்தருளினார்.

இது துடிக்கூத்து, குடைக் கூத்து என்பன.

"தண்டையணி" என்ற திருப்புகழிலும் இந்த நடனத்தை மிக அழகாக அடிகளார் கூறியுள்ளார்.

**சோர்வேதத்தலைமேலாடி:—**

நெறி பல கொண்டு, உண்மை இது எனத் தெற்றென உணர்த்தாது வேதந்தளர்கின்றது.

**தூணேடிச் சுட ராகாசத்தைய ணைந்து விளங்கு அருணாசலம்:—**

மாலும் அயனும், தாமே பரமென்று மாலும் மனத்தினராய் எதிர்த்துப் போராடினர். பலகாலும் போர்புரிய உலகந் தடுமாறித் தளர்ந்தது.

# கற்பு

## கலகை

மனிதர்களைப் புனிதஞ் செய்யும் நதி கங்கா நதி. தாயைப்போல் தண்ணளி சுரந்து பயிர்களையும் உயிர்களையும் காத்துக் கருணைபுரிவது. பகீரதனுடைய அரிய பெரிய தவத்துக்காக இரங்கி சிவபெருமானுடைய சிரத்தில் இருந்து இரங்கிவந்த இனிய கனியமுதம் போன்றது. தன்னில் முழுகியோரது பாவங்களை ஒருங்கே போக்கவல்லது கங்கை. சமானமில்லாத நதி கங்கை. "திரையிடங் கொளும் நதிகளில் சிறந்தது கங்கை" என்று முருகப் பெருமான் வள்ளி நாயகியிடம் கூறுவதாகக் கந்தபுராணங் கழறுகின்றது.

இத்தகு சுத்த வித்தகமான கங்கா நதிக்கரையில் தர்மாங்கதர் என்ற ஒரு மாமுனிவர் பதுமாசனத்தில் அமர்ந்து அரும் பெருந்தவம் புரிந்து கொண்டிருந்தார்.

அவருடைய கண்களில் அருள் நிறைந்து வழிந்தது. திருமுகத்தில் ஞான ஒளி வீசியது. அவருடைய மலர் முகத்தைக் கண்டால் கலி தீரும். அவரைக் கண்ட மாத்திரத்தில் கொடிய விலங்கினங்களும் பரம சாதுவாகி அவரை வணங்கிச் செல்லும்.

---

அவ்விருவருக்கு நடுவே சிவபெருமான் ஆதியந்தங் காணாதவாறு சோதித்தூணாக நின்றார். அச் சிவசுடரின் தூண் உலகெலாம் ஊடுருவி நின்றது. அதன் அடிமுடி காணாது அயனும் அரியும் அயர்ந்து நின்றார்கள். அண்ணாது—எட்டாது நின்றபடியால் அண்ணாமலை யெனப்பட்டது.

இத்தகு வித்தக ஞானமலை திரு அண்ணாமலை.

இதனால் திருவண்ணாமலை எல்லையில்லாத சிறப்புடையது என வுணர்க. சிவந்த சோதிமலையாதலின், அருணாசலம். (அருணம்—சிவப்பு) சோண சைலம், சோணாத்திரி, அருணகிரி, எனப் பலப்பல பேர் பெற்றது.

இம்மலையை நினைப்பார் வினைப்பகை நீங்குவர். சித்தியும் முத்தியும் பெறுவர்.

## கருத்துரை

அருணை மேவும் அண்ணலே! உடல் மெலிந்து நலிந்து வீணே அழியாமல் உன் திருவடிசேர அருள் செய்.

அவர் பிரமதேவரைப் போல் காட்சி யளித்தார். அவருடைய அதரத்தில் வேத மணங்கமழும். சடைமுடி பொன் மயமாகத் திகழ்ந்தது,

மழை வெயில் காற்று பனி பசி தாகம் முதலியவைகளைப் பொறுத்துக்கொண்டு சித்திரப் பதுமைபோல், "ஓம் நமோ நாராயணாய" "ஓம் நமோ நாராயணாய" என்ற எட்டட்சரங்களை இடையறாது உச்சரித்துக் கொண்டிருந்தார். அவருடைய தவநிலையைக் கண்டு தேவரும் மற்றை யாவரும் விம்மிதம் அடைந்தார்கள்.

ஒரக்ரகாரத்தில் அந்தணர்கள் பலர் வாழ்ந்தார்கள். எல்லோரும் நல்ல ஆசாரம் உள்ளவர்கள். முத்தீ வளர்ப்பவர்கள். வேத நெறியில் நின்றவர்கள். பொறி புலன்களை வென்றவர்கள்.

அந்த அக்ரகாரத்தில் ஒரு பரம சாதுவான அந்தணர் இருந்தார். கோபமறியாத குணக்குன்று. சந்தனம் போன்ற குளிர்ந்த மனமும், தேன் போன்ற இனிய சொற்களும் உடையவர். சதா பரம்பொருளைத் தியானம் புரிந்து கொண்டு கவலையின்றி காலங்கழித்தார்.

அந்த உத்தமமான—சாந்த மூர்த்திக்கு வாய்த்த மனைவி பேர் கலகை. எத்தனைக்கு எத்தனை கணவர் சாந்த சீலரோ அத்தனைக்கு அத்தனை அவள் உக்ரமானவள். அவளுக்கு சண்டையென்றால் சர்க்கரைப் பொங்கல். கணவனார் சொல்லுவதற்கு நேர்மாறாகச் செய்வாள். வேண்டும் என்பதைச் செய்யமாட்டாள், வேண்டாம் என்பதை உடனே செய்வாள்.

"கலகை! எனக்குப் பசிக்கின்றது" என்றால், "இப்போது என்ன அவசரம்? பசித்தால் உயிரா போகும்? பேசாமல் இரும்" என்பாள். உணவு உட்கொள்ளும்போது குழம்பு வேணும் என்றால் மோர் படைப்பாள். அன்னம் போதும் என்றால் மீண்டும் அன்னத்தைப் படைத்து "உண்ணும்" என்பாள்.

"மயக்கமாக இருக்கின்றது; சிறிது படுக்கின்றேன்" என்பார். அவள், "ஆ! உமக்கு என்ன தூக்கம்? பகலில் உறக்கமா?" என்று கூறிச் சீறி படுக்கின்ற இடத்தில் தண்ணீரை ஊற்றி நனைத்து விடுவாள்.

"கலகை! சீதளத்தால் நீர்க் கொண்டு இருக்கின்றது. மிளகு குழம்பு வை" என்பார். கலகை வெள்ளைப் பூசினிக்காயிட்டு மோர்க் குழம்பு வைப்பாள். அவர் என்ன செய்வார் பாவம்?

"கலகை! உடல் சூடாக இருக்கின்றது. உதிரம் போகின்றது. புகை யிருமல் வருகின்றது. காரம் இல்லாமல் குழம்பு வை" என்பார். அவள் பச்சைமிளகாயும் கத்தரிக்காயும் மசித்து வைப்பாள். கண்களில் தண்ணீர் வரும்படி காரத்தையிட்டுச் சமைப்பாள்.

"கலகை! கண் எரிகின்றது; எண்ணெயிட்டு நீராட வேண்டும்" என்பார். அவள் "உமக்கு எண்ணெய் ஸ்னானம் வேண்டுமோ?" என்று கூறித் தலையில் குளிர்ந்த நீரை எடுத்துக் கொட்டுவாள். "பிச்சைக் காரனுக்குச் சிறிது அரிசி போடு" என்றால் மணலை அள்ளிப் போடுவாள்.

இவ்வாறு இவர் சொல்லும் செயல்கள் எல்லாவற்றுக்கும் நேர் மாறாகச் செய்வாள். அதில் அவளுக்கு ஒரு ஆனந்தம்; பூரிப்பு. "இவர் சொல்லி நான் கேட்பதா? இந்த வீட்டில் நான் வைத்ததுதான் சட்டம். நான் போட்டதுதான் திட்டம்" என்பாள்.

அவர் அவளிடம் பஞ்சு படாதபாடு பட்டார். அவர் திணறிப் போனார். "இது என்ன வாழ்வு? ஒரு பெண்ணுக்குத்தான் எத்தனை அகங்காரம்? கடவுளே! இவள் எமதூதனுடைய மறு அவதாரம் போலும். சீ! இதுவும் பெண் பிறப்பா? இவளுடன் வாழ்வதும் ஒரு வாழ்வா? "சற்று ஏறுமாறாக இருப்பாளே யாயின் கூறாமல் சந்யாசங் கொள்!' என்பார்கள் ஆன்றோர்கள். இவள் சற்றல்ல; முற்றிலும் நேர்மாறாக நடக்கின்றாள். இனி ஒரு கணமும் இவளுடன் வாழ்வது கூடாது. "விட்டார்க்கு வேதனை கிடையாது" என்று தனக்குள் சிந்தித்தார். எங்காவது போய்விடுவோம் என்று துணிந்து புறப் பட்டார்.

வழியில் ஒரு அரிய நண்பரைச் சந்தித்தார். அவர் "அன்பரே! எங்கே புறப்பட்டுப் போகின்றீர்? என்ன முகவாட்டமாக இருக் கின்றீரே? உமக்கு யாது குறை? கூறும்" என்று பரிவுடன் கேட்டார்.

அந்தணர் "நண்பா! எனக்கு களத்திரகாரகன் சுக்கிரன் நீசம் போலும். மனைவி வாய்க்கவில்லை. மிகவும் பொல்லாதவள். அவ ளுடன் ஒருநாள் வாழ்வது ஒரு யுகம்போல் துன்பத்தைத் தரு கின்றது. நான் பட்ட வேதனைக்கு எல்லையே கிடையாது" என்றார்.

நண்பர் "அன்ப! அவள் என்ன செய்கின்றாள்?"

"அவள் பெண்ணல்ல; விலங்கு" ஆமாம்! சர்கஸ்ஸில் புலி கரடி சிங்கங்களைக்கூட அடக்கி ஆள்கின்றார்களே. ஒரு பெண்ணை அடக்கி யாள முடியவில்லையா?"

"அவள் விலங்கு அன்று; அவள் பேய்."

"பேய் கூட வேப்பிலை அடித்தால் விலகுமே?"

"அவள் பேயன்று: நாய்."

"நாய் நன்றியுள்ள பிராணியாற்பிறே. தலைவனுடைய நலத்தில் எச்சரிக்கையாக இருக்குமே?"

"உன் மனைவி என்ன செய்கின்றாள்? சிறிது விவரமாகச் சொல்" என்று வினவினர்.

அந்தணர் "அன்பனே! சிவபெருமான் திருவிளையாடல் அறுபத்து நான்குதான். இவள் செய்யுந் திருவிளையாடல் ஆறு லட்சத்து அறு பதினாயிரத்து ஆறுநூற்று அறுபத்து நான்கு. அம்மம்ம! அவற்றை சொல்ல மொழி கிடையாது. எழுதினால் ஏட்டில் அடங்காதவை. என்னால் முடிந்தவரை பொறுத்தேன். இப்போது முடியாமல்தான் புறப்பட்டுப் போகின்றேன்" என்றார்.

நண்பர் "அன்ப! உன் மனைவி என்ன செய்கின்றாள்? அதை விவர மாகக் கூறு. என்னால் முடிந்த வரை அதற்கு ஒரு பரிகாரம் கூறு வேன்" என்றார்.

வேதியர் "அன்பரே! அவள் புரியும் அல்லல்கள் பலப்பல; ஆயிரம் ஆயிரம் தொல்லைகள். அவற்றைச் சுருக்கிச் சொல்லுகிறேன். வேண்டும் என்பதை வேண்டாம் என்று செய்வாள்; வேண்டாம் என் பதை வேண்டும் என்று செய்வாள்" என்றார்.

நண்பர் "ம்...இவ்வளவுதானே இதற்காக நீர் வருந்த வேண் டாம். நான் சொல்கின்றபடி கேள். உனக்கு வேண்டாம் என்பதை வேண்டும் என்று சொல், வேண்டும் என்பதை வேண்டாம் என்று சொல். ஒழுங்காகச் சுமுகமாகக் காரியங்கள் நிகழும். அயர்ச்சி யில்லாத முயற்சி உயர்ச்சி தரும். என் ஆலோசனைபடி செய்யும். நீர் உமது இல்லத்துக்கும் போம்" என்றார்.

இந்த வார்த்தையைக் கேட்ட சாது பிராம்மணர் அவருடைய ஆலோசனையை ஏற்றுக் கொண்டார். "நல்லது இந்த முறையைக் கையாண்டு பார்ப்போம்" என்று வீட்டுக்குத் திரும்பி வந்தார்.

இப்போது இவருக்குக் கடும் பசி. "கலகை! எனக்குப் பசியில்லை. சாப்பாடு வேண்டாம்."

"ஆ! பசியில்லையா. உமக்காகச் சமைத்ததை யார் சாப்பிடுவார் கள்? 'கப் சிப்' என்று இருந்து சாப்பிடும்? என்று இலையிட்டு அன்னம் படைத்தாள். குழம்பு இடு என்றால் மோர் படைப்பாள். அதனால் அவர், "கலகை! இன்று எனக்குக் குழம்பு வேண்டாம். மோர் படை" என்றார். "ம்...எடுத்தவுடனே மோரா வேண்டும். உமக்கென்ன பைத்தியமா? கத்தரிக்காய் மாங்காய் முருங்கக்காய் மூன்று சேர்த்துக் கூட்டணிக் குழம்பு வைத்திருக்கின்றேன். அமிர்தம் போல் சுவை யாகச் செய்துள்ளேன்" என்று கூறிக் குழம்பைப் படைத்தாள். அவர் மகிழ்ச்சியாக உண்டார். முடிவில் மோர் படை என்றால் மற்றொன் றைப் படைப்பாள். ஆகவே, "கலகை! குழம்பு மிக நன்றாக வுளது. குழம்பையே படை" என்றார். "கடைசி வரை குழம்பா? பசுவின் மோர் காயம் இஞ்சியிட்டுத் தாளிதம் செய்துளேன். மோர் போட் டுக் கொள்ளுங்கள்" என்று கூறி மோர் படைத்தாள்.

அந்தணர் "கலகை! குளிக்கும் அறையில் என் ஆடைகளை வைத்துளேன். அவைகளை நீ தொடக்கூடாது; தோய்க்கக் கூடாது. இது என் கட்டளை" யென்றார்.

அவள் "ம்...உமது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நான் ஒரு போதும் நடக்க மாட்டேன். இன்று முதல் உமது உடைகளை நான் தோய்த்துப் போடுவேன். நீர் செய்வதைச் செய்யும்" என்று கூறி அன்று முதல் கணவனுருடைய ஆடைகளைத் தூய்மையாகத் தோய்த்து உலர்த்தி மடித்து வைத்தாள்.

அந்தணர் "இன்று சனிக்கிழமை; எண்ணெயிட்டுக் குளிக்கமாட்டேன்" என்றார். அவள் "ஏது உமக்கு விவரீத புத்தி வந்துளது. சனிக்கிழமை எண்ணெயிட்டுக் குளிக்கவேண்டாமா? எண்ணெய் ஸ்னானம் நம் நாட்டு தட்ப வெப்ப நிலைக்கு ஏற்றது என்று மருத்துவ நிபுணர் கூற நீர் கேட்டதில்லையா? இந்தாரும் சுத்தமான நல்லெண்ணெய்" என்றார்.

அவர் "நல்லது. நானே எண்ணெய் தேய்த்துக் குளிப்பேன். நீ அப்புறம் போ" என்றார். அவள், "நான் இருந்தால் என்ன குறை? நானே எண்ணெய் தேய்ப்பேன்" என்று கூறி எண்ணெய் தேய்த்து முதுகு தேய்த்து அருகிலிருந்து முழுக்காட்டினாள்.

சாப்பிட்டவுடன் வெளியே புறப்பட்டார். "சாப்பிட்டதும் எங்கே ஊர் சுற்றப் போகின்றீர்? படும்" என்றாள். "சரி! படுக்கையைத் தொடாதே. நானே படுக்கை போட்டுப் படுப்பேன்" என்றார்.

"ஏன்! நான் போட்டால் என்ன? நீர் என்ன சன்யாசியா? மனைவி தான் படுக்கை போடவேணும்" என்று கூறி படுக்கையை உதறிப் போட்டாள்.

அந்தணர் படுத்தார். "கலகை என் கை கால்களைத் தொடாதே" என்றார். "ஏன் நான் தொடக்கூடாது? நான் தங்கள் தர்மபத்தினி தானே? எனக்கு உம்மைத் தீண்ட உரிமை யுண்டு" என்று கூறி, கை கால்களை யெல்லாம் வருடி அழுத்திவிட்டாள்.

"கலகை! வீதியில் ஒரு அதிதி அரிசிப் பிச்சை கேட்கின்றான். கொஞ்சம் மணலை அள்ளிப்போடு" என்றார்.

கலகை "நீர் ஒரு பிராம்மணனா? பிச்சைக்காரனுக்கு மணலைப் போடச் சொல்லுகின்றீரே? உமக்கு என்ன இதயம் இல்லையா? அல்லது இரும்பு இதயமா? பஞ்சமகா யக்ஞங்களில் ஆதித்யம் ஒரு யக்ஞமல்லவா? அதிதிகளை ஆராதிப்பது இல்லறத்தாருடைய முதற் கடமையல்லவா?" என்று கூறி தெருவில் நிற்கும் அதிதிக்கு அன்னமும் குழம்பும் இட்டாள்.

மனைவியின் வார்த்தைகளைக் கேட்ட அந்தணர் உள்ளம் குளிர்ந்தது. "ஆ! நண்பன் சொல்லிக் கொடுத்த ஆலோசனை மிகமிகச் சிறந்தது; மந்திர சக்தி வாய்ந்தது. அதிதிக்கு அன்னம் போடு என்று கூறியிருந்தால் மணலை யள்ளிப் போட்டிருப்பாள். மணலைப் போடு என்ற மந்திர வார்த்தையால் அதிதிக்கு அன்னங் கிடைத்தது. இது உத்தமமான யுக்தி" என்று எண்ணி இதயம் மகிழ்ந்தார்.

இவ்வாறு அந்தணர் தனக்குத் தேவைப்பட்டதை தேவையில்லையென்றும் தேவையில்லாததை தேவையென்றுங் கூறி தன் காரியங்களை ஒழுங்காக நடாத்திக் கொண்டு வந்தார்.

முன்னே சந்தித்த நண்பர் அவரை ஒருநாள் சந்தித்தார். "என் அன்பரே! இப்போது உமது குடும்பம் எப்படி உளது? உமது மனைவி எப்படி இருக்கின்றாள்?" என்று கேட்டார்.

"அன்பரே! கட்றகரையின் பிரயாணம் போல் ஜிலு ஜிலு என்று வாழ்க்கைச் சகடம் சுகமாக ஓடுகின்றது. ஒரு குறையுமில்லை. வேட்டிகளைத் தோய்த்து உலர்த்துகின்றாள். படுக்கை போடுகின்றாள். கால்களைப் பிடிக்கின்றாள்; எண்ணெய் தேய்க்கின்றாள்; விசிறி விடுகின்றாள். சகல வேலைகளையும் செய்கின்றாள். ஆனால் ஒரு துயரம் உண்டு. அது என்ன என்றால் நினைவுடன் மாற்றி மாற்றிச் சொல்ல வேண்டும்" என்றார். "நண்பரே பல துயரங்கள் போய் ஒரு துயரந்தானே. இப்படியே வாழ்க்கைச் சகடத்தைச் செலுத்தும்" என்றார்.

ஒரு சமயம் அந்தணருடைய பிதாவின் சிராத்தம் வந்தது. அந்தணர் முதல் நாளே மனைவியைப் பார்த்து "பெண்மணியே! நாளை என் தந்தையாருடைய சிரார்த்தம். நாளைக்கு வீட்டை மெழுகாதே. நீ நீராடாதே. சமையல் செய்யாதே. புரோகிதரை அழைக்காதே" என்று வரிசையாகச் சொன்னார். எல்லாவற்றையும் எதிர்மாறாகச் செய்து முடித்தாள்.

அந்தணர், புரோகிதர் மந்திரம் கூறப் பிண்ட பிரசாதம் இட்டார். மனைவியிடம் கொடுத்து அசுத்தமான இடத்தில் கொட்டு என்று சொல்லி யிருக்க வேண்டும். அந்தணர் அன்று அந்த நேரத்தில் மறந்து, "தூய நீரில் பிரசாதத்தைக் கொட்டு" என்று கூறிக் கொடுத்தார். அவள் அதனை அசுத்த நீர் தேங்கும் இடத்தில் கொட்டினாள்.

கோபத்தையே யறியாத குணக்குன்றமாகிய சாந்தசீலருக்கு சினத்தீ எரிமலைபோல் பொங்கி எழுந்தது. அவருடைய கண்கள் சிவந்தன. புருவங்கள் நடு நெற்றிக்கு ஏறின. "பாவீ! எனக்குக் கோடானு கோடி குற்றங்கள் செய்தாய். அத்தனையையும் பொறுத்தேன். பிதிர்களின் பிரசாதத்தை அசுத்த நீரில் கொட்டி பிதிர்களுக்குப் பெருங்கேடு செய்தாயே. படுபாவி! பேயாகப் போகக் கடவது"

என்று சபித்தார். உத்தமமான சுத்தாத்துமாவாகிய அந்தணருடைய சாபத்தால் கலகை அலகையாக மாறினுள்.

நிற்க நிழலும் நீரும் இன்றி பலப்பல ஆண்டுகள் பேயாக அலைந்து திரிந்து உழன்ருள். பெருந்துயரம் அடைந்தாள். அங்கும் இங்கும் உலைந்து அலைந்து நொந்து வெந்து வேதனை யடைந்தாள்.

கங்கை நதிக்கரையில் மாதவம் புரிந்து •கொண்டிருந்த தருமாங்கதர் என்ற மாதவரிடம் போய் அவரை நெருங்கி அச்சுறுத்தினுள். அவர் பேயைப் பார்த்து புன்முறுவல் செய்தார்.

நெருப்பு மலையிடம் புழு நெருங்கியது போல் இந்தப் பெண் பேய் நம்மிடம் நெருங்குகின்றது என்று எண்ணினர். கமண்டல நீரை எடுத்து "ஓம் நமோ நாராயணுய" என்று கூறித் தெளித்தார். அக்கணமே அவளுடைய பாபம் சாபம் இரண்டும் தீயில் பஞ்சுபோல் எரிந்து விலகின. முன்னைய பெண்ணுருப் பெற்ருள்; நல்லறிவை யுற்ருள்.

தருமாங்கத முனிவருடைய திருவடியில் விழுந்து தொழுதாள். தனது அறியாமையை நினைந்து அழுதாள். "கருணைநிதியே! தவ முனீந்திரரே! நான் அந்தண மாது. என் பேர் கலகை. உத்தமமான கணவனுடைய உள்ளம் வருந்தப் பலகாலம் அவருடைய கட்டளைக்கு நேர்மாருக நடந்தேன். பிதிர்களின் பிரசாதத்தை அசுத்த நீரில் கொட்டினேன். அவர் உள்ளம் கொதித்துப் பேயாகுமாறு சபித்ததால் பலப்பல ஆண்டுகள் பேயாக அலைந்தேன். தங்கள் கருணையால் துயரந் தீர்ந்தேன். இப்போது என்னுடைய அறியாமையை நினைந்து கவல்கின்றேன். பெண்களுக்குக் கணவன்தான் கண்கண்ட கடவுள். கணவனுக்குப் பணி புரியும் பெண்கள் பரகதியில் சுகப்படுவார்கள். கணவனைத் தொழுது எழுவாளை விண்ணும் மண்ணுந் தொழும். கணவன் குறிப்பறிந்து ஒழுகும் குலமகள் நலமெலாம் பெறுவாள்; பெண்களுக்குக் கணவன்தான் எல்லாம். நான் பெண்ணறத்தைத் துறந்து கணவனுருடைய அருமை பெருமைகளை மறந்து அவருக்குக் கேடுகள் பல செய்தேன். அதன் பயனை அநுபவித்துவிட்டேன். அருட்பெருங்கடலே! நான் உய்யுமாறு எனக்கு நல்லருள் புரியும். உமது திருவடிக்குப் பல கோடி வணக்கம்" என்று இரந்து கூறி அழுதாள். அவருடைய சொற்களைக் கேட்ட முனிவர் பெருமானுடைய உள்ளம் உருகியது. அவள்மீது கருணை செய்தார்.

"ஆரணங்கே! வருந்தாதே. நான் இதுவரை செய்த மாதவத்தில் பாதியை உனக்கு வழங்கினேன். உனக்கு நற்கதி கிடைப்பதாக" என்ருர்.

உடனே வைகுண்டத்திலிருந்து ஆயிரம் சந்திர ஒளியுடன் கூடிய அழகிய மணித்தேர் வந்தது. நாராயணருடைய பரிசனங்கள் வந்தார்கள்.

தருமாங்கதரையும், கலகையையும் இரத்தின விமானத்தில் ஏற்றிக் கொண்டு வைகுந்தத்தில் சேர்ந்தார்கள். கோடி சூர்ய ஒளியுடன் விளங்கும் பரவாசுதேவனைத் தருமாங்கதரும் கலகையும் சேவித்தார்கள். பேரானந்தப் பெருவெள்ளத்தில் முழுகினார்கள். கண்ணுக்கு அடங்காத அற்புதக் காட்சியில் திளைத்தார்கள். ஆடினார்கள்; பாடினார்கள். தம்வசமழிந்து பரவசமடைந்தார்கள். பெருமாளைச் சேவித்துக் கொண்டு நித்திய சூரிகளாக நின்றார்கள்.

பல காலத்துக்குப் பின்னர், அயன் முதலிய அமரர்கள் திருமாலிடம் இராவண வதம் புரிந்து தங்கள் இடர் களையுமாறு முறையிட்டார்கள். பரந்தாமனார், "அமரர்களே! இராவணன் வரம் பெறும் போது வானரங்களாலும் மனிதர்களாலும் மரணம் வராமல் இருக்க வேண்டும் என்ற வரத்தைப் பெற்றானில்லை. ஆதலால் நான் மனிதனாக வருவேன். நீவிர் வானரங்களாகப் பிறந்திருங்கள்" என்று பணித்தருளினார்.

திருமால் பணித்தவாறு இந்திராதி இமையவர்கள் வானரங்களாக மண்மீது பிறந்தார்கள்.

திருமால் தான் மண்ணில் வந்து அவதரிக்கத் திருவுளங்கொண்டார். தன்னைப் பெறுவதற்குரிய அரிய பெரிய தவஞ் செய்தவர்கள் ஒருவரையும் காணவில்லை. தன் அருகில் நிற்குந் தருமாங்கதரைப் பார்த்தருளினார்.

"தருமாங்கதனே! நீ போய் மண்ணுலகில் இக்ஷுவாகுவின் குலத்தில் கஜனுக்கும் இந்துமதிக்கும் மகனாகப் பிறந்து, மகப்பேறு குறித்து அறுபதினாயிரம் ஆண்டுகள் தவம் புரிவாயாக. உனக்கு யாம் மகனாக வருவோம்" என்று கட்டளையிட்டருளினார், அதுப்படியே தருமாங்கதர் தயரதனாகப் பிறந்தார்.

திருமால் "அம்மா! கலகை! நீ பாதி தவப் புண்ணியத்தைப் பெற்றவள். நான் இராமவதாரம் செய்தபோது, என்னை நீதான் வளர்க்க வேண்டும். நீ கேகய நாட்டில், இராஜக் கிருகம் என்ற நகரில் அசுவபதி என்ற வேந்தனுக்கு மகளாகப் பிறப்பாய். கைகேசி என்ற நாமத்துடன், தயரதனை மணந்து, பிறந்த வீட்டிலும், புகுந்த வீட்டிலும் புகழ் பெற்று விளங்குவாய். நான் உன் கையில் வளர்வேன், முன் கணவனிடம் செய்த கலகம் போல், சமயம் வரும்போது இராவண வதம் புரியும் பொருட்டு, என்னைக் கானகம் போகுமாறு ஒரு கலகஞ் செய்வாயாக" என்று பணித்தருளினார்,

கலகை கைகேசியாகப் பிறந்தாள்.

உ

முருகா



## சாந்தி பர்வம்

### மோக்ஷ தர்மம்

(44ஆம் பக்கத் தொடர்ச்சி)

காலவ முனிவர் நாரதரைப் பார்த்துக் கேட்டார். "குணங்களுக் கெல்லாம் உறைவிடமான தேவரிஷியே! வெகுகாலமாக மூடர்களாக இருப்பவர்களும், தத்துவத்தை யறியாதவர்களுமான எங்களுடைய சந்தேகத்தை நீர் போக்க வேண்டும். சாத்திரம் ஒன்ருக இருந்தால் எளிதாக நாங்கள் மேன்மைக்குரிய வழியைத் தெரிந்துகொள்ள முடியும். சாத்திரங்கள் பலவாகப் பரந்து விரிந்து காணப்படுகின்றன. தாங்கள் எல்லாவற்றையும் அறிந்தவர். நுண்ணறிவில்லாத நாங்கள் மேன்மை யடைய வழி யாது?" என்று கேட்டார்.

நாரதர் "காலவரே! எப்போதும் ஆன்ருேர்களை அடுத்திருப்ப துவே மேன்மைக்கு வழியாகும். பகைவரை விட்டு விலகவேண்டும். நண்பர்களை அநுசரிக்க வேண்டும். எல்லா உயிர்களிடத்திலும் இத மாக இருக்க வேண்டும். இனிமையாகப் பேசவேண்டும். தெய்வ வழிபாடு, நீத்தார் வழிபாடு, உண்மை பேசுதல், நான் என்ற அகங் காரத்தை யகற்றுதல் இவைகள் மேன்மைக்குரிய வழிகளாகும். இரவில் உலாவுவதையும், பகலில் உறங்குவதையும், சோம்பலையும், கோள் சொல்லுவதையும், அதிகம் சாப்பிடுவதையும் கைவிடவேண் டும். மிதமாக உண்ணவேண்டும். இவைகள் மேன்மைக்கு வழியாகும். பிறருடைய குற்றங்குறைகளைக் கூறக்கூடாது. உலகத்திலே முழுவ தும் குணம் நிறைந்த ஒருவரையும், முழுவதும் குற்றம் நிறைந்த ஒருவரையும் காணமுடியாது. குற்றமும் குணமும் கலந்துதான் இருக் கும். தங்க நகைகளில் சிறிது செம்பு இருக்கும். அந்தச் சிறு செம்புக் காக தங்க அணிகளை யார் வெறுக்கின்ருர்கள்? மலர் எடுக்கச் சென்ருல் முள் இருக்கும்; நீராடச் சென்ருல் சேறு இருக்கும். நாம் சேற்றைத் தள்ளி நீரையும், முள்ளைத் தள்ளி மலரையும் எடுப்பது போல் பிற ருடைய குறறத்தைத் தள்ளிக் குணத்தை மட்டும் எடுத்துக்கொள்ள வேண்டும். பிறர்மீது குறை கூருது குணத்தைக் கூறவேண்டும். இப்படிக் கூறுகின்றவன் மேன்மை யடைகின்ருன்.

தன்னுடைய குணங்களையும் பெருமையையும் ஒருபோதும் பெரி தாக நினைக்கக் கூடாது. தன் புகழையும் பேசக்கூடாது மலர் ஒன்றும் பேசாமலேயே வாசனை வீசுகின்றது. சூரியன் ஒன்றும் பேசாமலேயே

ஒளி வீசுகின்ருன். அதுபோல் உத்தமர்கள் தாம் விளம்பரப்படுத்தாமலேயே அவர்கள் புகழ் எங்கும் பரவும்.

நியாய விரோதமாய் கேட்கின்றவனுக்கு மறுமொழி கூருமல் மௌனமாயிருக்க வேண்டும். ஏன்? நாய் வாலை நேராக்க முடியாது. அதுபோல் குதர்க்கவாதிகள் ஒரு போதும் திருந்தமாட்டார்கள். ஆதலால் அவர்களிடம் பேசி பொன்னன காலத்தை வீணுக்கக் கூடாது. அறிவில்லாதவர்களுடன் பழகக் கூடாது. சாதுக்களுடன் பழகியவன் புண்ணியத்தையும், தீயவருடன் பழகியவன் பாவத்தையும் அடைகின்ருன். நல்லோர்கள் இல்லாத இடத்தை, பற்றி எரிகின்ற மேலாடையை விரைவில் அகற்றுவதுபோல் தள்ளிவிட வேண்டும். உத்தமர்கள் வாழும் இடத்தில் உறையவேண்டும். இவைகள் மேன்மைக்கு வழியாகும்'' என்று சொன்னுர்'' என்ருர்.

## சகரனுக்குக் கருடர் உபதேசித்தது

யுதிஷ்டிரர் "பாட்டனுரே! எங்களைப் போன்ற அரசன் எந்தக் காரியத்தைச் செய்யவேண்டும்? எப்பொழுதும் எந்தக் குணங்களுடன் இருந்தால் பந்த பாசத்திலிருந்து விடுபடுவான்?'' என்று வினவினர்.

பீஷ்மரர் கூறுகின்ருர். "தருமா! முன் கருட பகவான் சகரனுக்கு உபதேசித்த அறவுரையைக் கேள்.

சகர மன்னன் வைனதேயராகிய கருடரை நோக்கி, "அறிவிற் சிறந்தவரே; இகத்தில் ஒருவன் எந்தக் காரியத்தைச் செய்து சுகத்தை அடைகின்ருன்? துக்கத்தையும் கலக்கத்தையும் அடையாமல் இருப்பது எப்படி? தாங்கள் எல்லாம் அறிந்தவர். உபதேசஞ் செய்யும்'' என்று கேட்டான்.

கருடர் "சகரனே! உலகில் மோட்ச* சுகமே சுகம். மக்களிடத்திலும் தன தானியங்களிடத்திலும் பற்றுதல் வைத்தவனுன மூடன் அதை அறிகின்றதில்லை. பற்றுதலும் நிலையற்ற மனமும் உடையவன் சீர்திருத்த முடியாதவன். பந்த பாசமான கயிற்ருல் கட்டுண்ட மூடன் மோட்சத்திற்கு உரியவனுகின்றதில்லை. பருவம் அடைந்த மகனிடத்தில் குடும்பச் சுமையை ஒப்புவித்து விடுபட்டு நீ புறப்படுவாயாக. மனைவியை மகனிடம் ஒப்புவித்துவிட்டு நீ ஆசையையகற்றிச் செல். நான் இல்லையானுல் இவர்கள் எப்படி வாழ்வார்களோ என்று வருந்தற்க. நீ இறந்த பின் வாழ்வார்கள்தானே? எல்லாப் பிராணிகளும் உண்டு உறங்கி வாழ்கின்றன அல்லவா? எல்லாரும் சுகதுக்கங்களை அவரவர்கள் கன்மங்களினுலேயே நுகர்கின்ருர்கள். பரதந்திரனுகிய மனிதன் தன் குடும்பத்தாரைக் காக்க

* மோட்சம்—விடுபட்டது.

உரிமை என்னவுளது? எத்தனைதான் காக்க முயன்றாலும் ஒருவன் மரணமடைவதைப் பார்க்கின்றோம். என்றேனும் ஒருநாள் குடும்பத் தாரை விடுத்து இறக்க நேருந்தானே? இறந்த பின் அவர்கள் என்ன செய்கின்றார்கள் என்பதை அறிய முடியுமா? நீ இருந்தாலும் இறந் தாலும் மனைவி மக்கள் அவர்கள் விதிப்படிதான் எதையும் அநுபவிக்க முடியும். ஆதலால் நீ மோட்சத்தில் புத்தியைச் செலுத்து. உறுதியை மேற்கொள். பசி தாகங்களையும் லோபத்தையும் குரோதத்தையும் மோகத்தையும் எவன் வென்றவனோ அவன் * முக்தனே. சூதாட்டத் திலும், குடியிலும், பெண்கள் விஷயத்திலும் வேட்டையிலும் பற்று தல் இல்லாதவன் எவனோ அவன் முக்தனே. இரவும் பகலும் உணவி லேயே நினைவை வைக்கின்றவன் உய்வு பெறமாட்டான். உலகில் உயிர்களுடைய பிறப்பையும் இறப்பையும் இருப்பையும் உண்மையாக எவன் அறிகின்றானோ அவன் முக்தனே. ஆயிரங்கோடி வண்டிகளில் தானியங்கள் இருப்பினும் தனக்கு வேண்டியது ஒரு படிதான் என்றும் இடமகன்ற பெரிய மாளிகையாக இருப்பினும், தான் படுக்கக் கூடிய இடம் ஆறடி யளவுதான் என்றும் உணர்ந்தவன் எவனோ அவன் முக்தனே. உயிர்கள் காலனால் மரணமடைவதையும் நோயினால் நொந்து தவிப்பதையும், பிழைப்பின்றி வருந்துவதையும் எவன் நன்கு கூர்ந்து பார்க்கின்றானோ அவன் முக்தனே. இப்படிப் பார்க் கின்றவன் மகிழ்வான்; பாராதவன் கெடுவான். சிறிது கிடைத்தாலும் எவன் திருப்தி யடைகின்றானோ அவன் முக்தனே. பஞ்ச சயனமும், வெறுந்தரையும், நெல்லரிசி யன்னமும் புல்லரிசிக் கஞ்சியும், பட்டா டையும் மரவுரியும் எவனுக்கு ஒன்றுபோல் தோன்றுமோ அவன் முக்தனே. இன்ப துன்பங்கள், வெற்றி தோல்விகள், லாப நஷ்டங் கள், விருப்பு வெறுப்புக்கள், பயாபயங்கள் எவனுக்குச் சமமாகத் தோன்றுகின்றதோ அவன் முக்தனே. இந்த உடம்பு உதிரம் சீழ் மல சலம் பிழை கிருமிகள் முதலியன நிறைந்தது என்றும், நரை திரை மூப்புக்கு உரியதென்றும் எவன் பார்க்கின்றானோ அவன் முக்தனே.

நாள் செல்லச் செல்ல ஆண்மை குறைவதையும் குருடாவதையும் செவிடாவதையும் தடுக்க மேற்படுவதையும் கூனிப் போவதையும் பார்க்கின்றவன் எவனோ அவன் முக்தனே. இந்த வுலகில் பெருமித மாக வாழ்ந்த மன்னாதி மன்னர்களும் முனிவர்களும் வீராதி வீரர் களும் இந்த மண்ணுலகத்தை விட்டுப் போய்விட்டார்கள் என்று அறிகின்றவன் முக்தனே. செல்வத்தைத் தேடுவதில் உள்ள துன்பப் பெருக்கையும் அதனால் வரும் இன்பம் அணுத்துணை யென்றும் அறி கின்றவன் முக்தனே. நீ இல்லறத்தில் இருந்து மோட்ச சாதனங்களை மேற்கொண்டு தளர்ச்சியில்லாத உறுதியுடன் முக்தனைப் போல் நடப்

---

* முக்தன்—விடுபட்டவன்.

பாயாக" என்று உபதேசித்தார். கருடரின் உபதேசப்படி சகரன் முக்தனுகிக் குடிகளைப் பரிபாலனஞ் செய்தான்.

யுதிஷ்டிரர் "பிதாமகரே! உசநஸ் என்றவர் சுக்கிரர் என்ற பேரை ஏன் அடைந்தார்! அவர் ஏன் தேவர்களிடம் மாறுபட்டார்? அசுரர்கட்கு ஏன் குருவாக ஆனுர்? அவர் செல்வப் பெருக்கை எவ்வாற பெற்ருர். அவர் ஏன் விண்ணில் நடுவில் போகின்றதில்லை? இவைகளை எனக்குச் சொல்லும்" என்று கேட்டார். பீஷ்மர் கூறுகின்ருர்

## சுக்கிரர் வரலாறு

"சுக்கிரர் பிருகு முனிவரது புதல்வர். உசநஸ் என்ற பேர் படைத்தவர்; நல்ல அறிஞர். சங்கநிதி பதுமநிதி என்ற செல்வங்கட்கு அதிபதியும், இராக்ஷஸர்கட்கும் யட்சர்கட்குந் தலைவனும், விச்ரவசுவின் மகனுமான குபேரனிடமுள்ள பெருஞ் செல்வத்தைக் கவர வேண்டும் என்று கருதினுர். ஒரு சமயம் யோகசித்தி பெற்ற உசநஸ் குபேரனுள் புகுந்து தன் யோக சக்தியால் அவனை மயக்கி அவன் பெருஞ் செல்வத்தைக் கவர்ந்தார்.

குபேரன் தனது தோழரும் எல்லா உலகங்கட்கும் ஈசரும் ஆகிய சிவபெருமானிடம் போய் முறையிட்டான். "தேவ தேவ! உசநஸ் என்ற கவி, யோக சக்தியால் என்னை மயக்கி என் பெருந்தனத்தை எடுத்துக்கொண்டார்" என்று கூறினுன். சிவபெருமான் பார்க்கவன் மீது சீற்றமடைந்து சூலத்தை ஏந்தி "அவன் எங்கே?" "அவன் எங்கே?" என்று சொன்னுர். உசனஸ் சிவ கோபத்துக் கஞ்சி சிறிய வுருவுடன் அவருடைய சூலத்தின்மீது காணப்பட்டார்.சிவபெருமான் அவரைப் பிடித்து வாயில் போட்டு விழுங்கிவிட்டார். பத்து லட்சங் கோடி வருஷம் சிவபெருமான் தவநிலையில் நின்ருர். உசனஸ் அவருடைய வயிற்றில் வெகு துயரமடைந்து உலாவினுர். பிரமதேவர் அங்கு வந்து சிவபெருமானைத் துதி செய்தார். உசனஸ் சிவபெருமானுடைய வயிற்றில் இருந்துகொண்டே சிவபெருமானைத் துதித்து ஐயனே! அடியேனுக்கு அருள புரிய வேண்டும்" என்று வேண்டினுர். சிவபெருமான் கருணை புரிய, சுக்ல மூலம் வெளிப்பட்டார். அதனுல் "சுக்கிரர்" என்று பேர் பெற்ருர். ஆதலால் ஆகாயத்தின் நடுவில் நாணத்தால் போகவில்லை. அமரர்கள் அவரை இகழ்ந்தார்கள். இதனுல் சுககிரர் அசுர குருவாக இருந்து அமரர்கட்கு நன்மை செய்யலானுர். இதனுல் சுக்கிரர் பார்வதி பரமேச்வரனுக்குப் பாலகராகவும் ஆனுர். சுக்கிரர் சிவபெருமானையும் உமாதேவியாரையும் வணங்கிப் பெருமை பெற்ருர்" என்று கூறினுர். (தொடரும்)

## எமது வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. 6-00 |
| 2. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | அச்சில் |
| 3. | திருப்புகழ்த் திரட்டு | ரூ. 1-00 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற் படைவீடு திருப்பரங்குன்றப் பாடல்களும்) | அச்சில் |
| 5. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர்) | அச்சில் |
| 6. | திருப்புகழ் விரிவுரை—மூன்ருவது தொகுதி (மூன்ருவது படைவீடு—பழநி) | ரூ. 5-00 |
| 7. | திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு—சுவாமிமலை) | ரூ. 2-50 |
| 8. | திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி குன்றுதோருடல் முதற்பாகம் | ரூ. 5-00 |
| 9. | திருப்புகழ் விரிவுரை—ஆரும் தொகுதி (குன்றுதோருடல் இரண்டாவது பகுதியும். பழமுதிர் சோலையும்) | ரூ. 5-00 |
| 10. | மகாபாரதம், வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரார் பாடல்களுடன் கூடியது | ரூ. 5-00 |
| 11. | கந்தரநுபூதி (உரையுடன்) | ரூ. 2-00 |
| 12. | அறிவுரையமுது (கட்டுரைகள்) | ரூ. 0-50 |
| 13, | திருவாசகத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 14. | செந்தமிழ் இன்பம் ( ,, ) | ரூ. 0-50 |
| 15. | சிந்தனைத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 16. | மணிமொழிகள் | ரூ. 0-50 |
| 17 | அநசூயை (வரலாறுகள்) | ரூ. 1-00 |

---